உ

ஸ்ரீகுருப்யோ நம:

ஜய ஜய சங்கர ! ஹர ஹர சங்கர !!

# ஸ்ரீ ஸுந்தரகாண்ட பாராயணக்ரமம்

# ஸ்ரீ ஆஞ்சநேய கவசம்



ஸ்ரீ ஆதிசங்கர பகவத்பாத வேதஸபா

திருவல்லிக்கேணி : : சென்னை-5.

1977] [ஞானயக்ஞம்

# ஸ்ரீ ஸுந்தரகாண்ட பாராயண க்ரமம்

வால்மீகி மஹர்ஷி ஸ்ரீ ராமாயணத்தில் ரிஷி, சந்தஸ், தேவதை, அங்கந்யாஸ, கரந்யாஸாதிகளைக் கூறவில்லை. பின்னர், இந்த அங்கங்களுடன் பாராயணம் செய்தால் பலன் என இதர நூல்கள் கூறின. ஸுந்தர காண்டத்திற்குக் காமனையின்றி பாராயணம் செய்ய ஒரு வகையாகவும், காம்ய பலனை நாடும்போது ஒரு வகையாகவும் ரிஷி சந்தஸ் முதலியன கூறப்படுகின்றன.

**நிஷ்காம்ய விதி**

அஸ்ய ஸ்ரீ ஸுந்தர காண்ட மஹா மந்த்ரஸ்ய ஹனுமான் ரிஷி; அனுஷ்டுப் சந்த: ஸ்ரீ ஜகன்மாதா ஸீதா தேவதா. ஸ்ரீம்பீஜம். ஸ்வாஹாஸக்தி; ஸீதாயை கீலகம். ஸ்ரீ ஸீதாராம சந்த்ர ப்ரஸாத ஸித்யர்த்தே ஜபே விநியோக:

**கரந்யாஸம் :**

*ஸீதாம் அங்குஷ்டாப்யாம் நம :*
*விதேஹ தனயாம் தர்ஜனீப்யாம் நம :*
*ராமஸ்ய தயி தாநகாம் மத்யமாப்யாம் நம :*
*ஹநூமதா ஸமாஸ்வஸ்தாம் அநாமிகாப்யாம் நம:*
*பூமிஜாம் கனிஷ்டி காப்யாம் நம :*
*ஸரணம் பஜே கரதலகர ப்ருஷ்டாப்யாம் நம :*

**அங்கந்யாஸம் :**

*ஸீதாம் ஹ்ருத்யாய நம :*
*விதேஹ தனயாம் ஸிரஸே ஸ்வாஹா*
*ராமஸ்ய தயிதாநகாம் ஸிகாயை வஷட்*
*ஹநூமதா ஸமாஸ்வஸ்தாம் கவசாய ஹும்*
*பூமிஜாம் நேத்ர த்ரயாய வௌஷட்*
*ஸரணம் பஜே அஸ்த்ராய பட்*
*பூர் புவஸ் ஸுவரோம் இதி திக் பந்த :*

**த்யானம் :**

*ஸீதாம் உதார சரிதாம் விதி முக்ய வந்த்யாம்*
*தேவீம் த்ரிலோக ஜனனீம் ஸ்ரித கல்பவல்லீம் I*
*ஹேம ஆஸன ஸ்திதி ஜுஷாம் மணிஹார மௌலிம்*
*பூஷோஜ்வலாம் அனுதினம் லலிதாம் நமாமி II*

(பொருள்) உதாரமான சரிதமுள்ளவளும் ப்ரும்மா முதலியவர்களால் வணங்கத்தக்கவளும், மூன்று உலகத்திற்குத் தாயும், கல்பகக் கொடியை ஆஸ்ரயித்தவளும் ஸ்வர்ண ஆஸனத்தில் இருப்பவளும், மணி, ஹாரம், சூடா மணி இவைகளை அணிந்தவளும், நகையால் அழகாக இருக்

கின்றவளுமான ஸீதாதேவியை ப்ரதிதினம் நமஸ்கரிக்கின்றேன்.

லம் ப்ருதிவ்யாத்மனே கந்தான் தாரயாமி.
(பூமி ரூபியானவளுக்கு கந்தம் அளிக்கிறேன்).
ஹம் ஆகாஸாத்மனே புஷ்பாணி ஸமர்ப்பயாமி
(ஆகாஸ ரூபியானவளுக்கு புஷ்பம் அளிக்கிறேன்)
யம் வாய்வாத்மனே தூபம் ஆக்ராபயாமி
(வாயு ரூபியானவளுக்கு தூபம் அளிக்கிறேன்.)
ரம் வன்யாத்மனே தீபம் தர்ஸயாமி
(அக்னி ரூபியானவளுக்கு தீபம் அளிக்கிறேன்.)
வம் அம்ருதாத்மனே அம்ருதம் நிவேதயாமி
(அம்ருதரூபியானவளுக்கு அம்ருதம்அளிக்கிறேன்)
ஸம் ஸர்வாத்மனே ஸர்வ உபசாரான் ஸமர்ப்பயாமி
(ஸர்வ ரூபியானவளுக்கு ஸர்வ உபசாரங்களையும் அளிக்கிறேன்.)

**மூல மந்த்ரம் :**

ஸீதாம் விதேஹ தனயாம் ராமஸ்ய தயிதானகாம்
ஹனூமதா ஸமா ஸ்வஸ்தாம் பூமிஜாம் ஸரணம் பஜே.

(விதேஹ ராஜன் பெண்ணும், ராமனது பத்னியும், ஹனுமானால் ஆஸ்வாஸப்படுத்தப்பட்டவளும் பூமியின் புதல்வியுமான ஸீதையை ஸரணமடைகிறேன்.)

மூலமந்த்ரத்தை 108—54—28—10 முறை ஸக்திக்கேற்றபடி ஜபித்து ஸுந்தர காண்ட பாராயணம் செய்து, பின்னர் திக்விமோசனம் வரை உத்தர அங்கமாக முன்போல் ந்யாஸம் செய்யவேண்டும்.

**காம்ய பாராயணத்திற்கு விஸேஷமானது**

முன்போலவே, மற்றவை எல்லாவற்றிற்கும் பொதுவானவை. விஸேஷத்தை மாத்ரம் கூறுவோம்.

அஸ்ய ஸ்ரீ ஸுந்தர காண்ட மஹாமந்த்ரஸ்ய ஹனுமான் ரிஷி :, அனுஷ்டுப் சந்த :, ஸ்ரீ மஹா ப்ரபாவ ஸ்ரீ ராமோ தேவதா. ராம்பீஜம். நம : ஸக்தி:, ராமாயேதி கீலகம். ஸ்ரீ ராம சந்த்ர ப்ரஸாத ஸித்தித்வாரா———— ப்ராப்த்யர்த்தே ஜபேவினியோக:,

**கரன்யாஸம் :**

உத்ஸாஹ : அங்குஷ்டாப்யாம் நம :
பௌருஷம் தர்ஜனீப்யாம் நம :
தைர்யம் மத்யமாப்யாம் நம :
ஆன்ரு ஸம்ஸ்யம் க்ருதக்ஞதா அனாமிகாப்யாம் நம :
விக்ரமஸ்சப்ரபாவஸ்ச கனிஷ்டிகாப்யாம் நம :
ஸந்தி வானர ராகவே கர தல கரப்ருஷ்டாப்யாம் நம :

**அங்கன்யாஸம் :**

உத்ஸாஹ ; ஹ்ருதயாய நம :
பௌருஷம் ஸிரஸேஸ்வாஹா
தைர்யம் ஸிகாயை வஷட்
ஆன்ரு ஸம்ஸ்யம் க்ருத க்ஞதா கவசாய ஹும்
விக்ரமஸ்ச ப்ரபாவஸ்ச நேத்ரத்ரயாய வௌஷட்
ஸந்தி வானர ராகவே. அஸத்ராய பட்
(திக்பந்தம் முன்போலவே).

**த்யானம் :**

ஸ்ருக் சந்தன ஆபரண பூஷித பாஸ்வர அங்கம்
வாமோரு ஸம்ஸ்தித மஹீதனயா உபகூடம்
உத்புல்ல பத்ம நயனம் ஸ்மித ஸுந்தர ஆஸ்யம்
ராமம் க்ருபாஜலநிதிம் மனஸா ஸ்மராமி. (1)

(மாலை, சந்தனம், ஆபரணம் இவைகளால் அலங்கரிக்கப்பட்டு ப்ரகாசமான அங்கமுள்ளவரும் இடது மடியில் ஸீதா தேவியை வைத்திருப்பவரும், மலர்ந்த தாமரை போன்ற கண் உள்ளவரும், சிரிப்பால் அழகிய முகமுள்ளவரும், கருணைக்கடலுமான ஸ்ரீ ராமனை மனதால் நினைக்கிறேன்.)

(சந்த்ர பிம்ப ஸமாகாரம் வாஞ்சிதார்த்த ப்ரதாயகம்
ஹநூமத் அர்ப்பித மணிம் த்யாயேத் காண்டேது
ஸுந்தரே. (2)

(சந்த்ர மண்டலத்திற்கு ஸமமானதும், விரும்பிய பொருளைத் தருவதும், ஹநுமானால் கொடுக்கப்பட்டதுமான மணியை ஸுந்தர காண்டத்தில் த்யானம் செய்ய வேண்டும்.)

(லம் முதலிய பஞ்ச பூஜை முன்போலவே)

**மூல மந்த்ரம் :**

உத்ஸாஹ : பௌருஷம் தைர்யம்
ஆந்ரு ஸம்ஸ்யம் க்ருதக்ஞதா
விக்ரமஸ்ச ப்ரபாவஸ்ச ஸந்தி வாநர ராகவே.

(உத்ஸாஹம், பராக்ரமம், தைர்யம், தயை, நன்றி மறவாமை, விக்ரமம், ப்ரபாவம் ஆகியவை ராமனிடத்தில் இருக்கின்றன.)

ஸக்திக்கேற்றபடி ஜபம் செய்து, திக் விமோசனம் முன்போல் செய்யவும். (ஆடியில் ஆதித்ய ஹ்ருதயம் கீதை.).

---

குறிப்பு : விரைவில் ராமாயணம் சித்திரத்துடன் நேயர்களுக்கு வழங்கப்படும்.

# ஸுந்தரகாண்டச் சுருக்கம்

ஸ்ரீமத் ராமாயணம் பாரத நாட்டின் தாரகம்; உலகின் பொக்கிஷம். உச்சந்தலைமுதல் உள்ளங்கால்வரையில் ஜீவாதாரமான ரத்தம் பரவியிருப்பது போல், ஹிமகிரி முதல் குமரி வரையில் ஸ்ரீமத் ராமாயணம் பரவியிருக்கிறது. லக்ஷக்கணக்கான மக்கள் இதைத் தினந்தோறும் படித்துக் கடைத்தேறி வருகிறார்கள்; கோடிக்கணக்கான மக்கள் போற்றி வருகிறார்கள். மேல்நாட்டவர் தம் தம் பாஷைகளில் மொழி பெயர்த்து அநுபவித்து வருகிறார்கள். மலரில் வண்டுகள் தேனைச் சுவைப்பதுபோல் அறிவாளிகளும் சமயாசார்யர்களும் கவிகளும் புராண கர்த்தாக்களும் ராமாயணத்தில் திளைத்து வந்திருக்கிறார்கள்.

ஸ்ரீமத் வால்மீகி மாமுனி ராமராஜ்யத்தில் அமைதியான காட்டில் இனிமையான தவவாழ்க்கை நடத்திப் பிரம்மாவின் அருளினால் உயர்ந்த ஆதிகாவ்யத்தைப் பாடினார்.

வால்மீகி ராமாயணத்தில் ஸுந்தர காண்டத்தில் ஹநுமானே சுருக்கமான ராமாயணம் கூறுகிறார். ஸ்ரீராமநவமியை ஒட்டி இந்த ஸுந்தரகாண்டச் சுருக்கத்தை எழுதுகிறேன். ஸ்ரீபரமாசார்யரும் சக்ரவர்த்தி திருமகனும் ஹநுமானும் நமக்கு மங்களத்தை உண்டு பண்ண வேண்டுகிறேன்.

முதல்முதலில் ஸீதாதேவியைத் திசைநோக்கித் தலையால் வணங்கினார் ஹநுமான். புளகாங்கிதம் கொண்டு கூறுகிறார்—

ஹே வானர வீரர்களே, நீங்கள் பார்த்துக்கொண்டிருக்கும்போதுதான் ஸமுத்திரத்தின் தென்கரையை அடைய விரும்பி, மகேந்திர மலையிலிருந்து ஆகாயத்தில் தாவினேன். இவ்வண்ணம் போகும்போது பொற்சிகரமுடைய ஒரு மலை வழி மறித்துத் தடைசெய்ததுபோல் நின்றது. என் வாலால் அதை அடித்தேன். அந்தச் சிகரம் தூள் தூளாகப் பிளந்தது. உடனே, "புத்ரா" என்று அந்த மலை மன மகிழப் பேசியது. "நான் உனக்குச் சிறிய தகப்பன்; வாயு பகவானுக்குத் தோழன். இந்த மஹோததியில் வஸிக்கும் மைநாகன். இந்திரன் மலைகளைச் சிறகரிந்தபோது உன் தந்தை இங்கே கொண்டு வந்து என்னைக் காத்தார். தர்மமூர்த்தியான ராமனுடைய கார்யத்துக்கு உதவி செய்யவே வந்தேன், தடை செய்ய அல்ல" என்றது. அதனிடத்தில் விடைபெற்று உற்சாகத்தோடு அதிக வேகமாக வெகு தூரம் போனேன்.

அப்போது கோரமான அரக்கி காணப்பட்டாள். "என் வாய்க்குள் புகுந்து ஆகாரமாக வேண்டும்" என்று அவள்

வழிமறித்தாள். நான் என் உடலை வளர்த்தினேன். அவள் தன் வாயை வளர்த்தினுள். திடீரென்று சிறுத்து அவள் வாயில் புகுந்து, வெளியே வந்து விட்டேன். உடனே அவள் ஸுரஸையென்ற நாகமாதாவாக மாறி நின்று என்னை வாழ்த்தி விடை கொடுத்து அனுப்பினுள்.

பின்பு, கருடனைப் போல் வானத்தில் போய்க்கொண்டிருந்தேன். திடீரென்று என் வேகம் தடைப்பட்டது. ஆனுல் யாரையும் காண முடியவில்லை. சுற்றிப் பார்த்து, ஜலத்தில் அரக்கியைக் கண்டேன். நிழலைப் பற்றி இழுக்கும் "சாயாக் ராஹி" அவள். "பசியோடு இருக்கும் எனக்குக் கொழுத்த ஆகாரம் ஆவாய்" என்று அவள் கர்ஜித்தாள். நான் உடலை வளர்த்தினேன். என் கருத்தை அறியாமல் அவள் என்னை விழுங்க வாயை வளர்த்தினுள். நான் உடனே சுருங்கி அவள் வாயில் புகுந்து ஹ்ருதயத்தைப் பிளந்துகொண்டு ஆகாயத்தில் எழுந்தேன். அவள் மாண்டு வீழ்ந்தாள்.

இவ்வண்ணம் கடலைக் கடந்து, மலைகள் நிறைந்த இலங்கையை அடைந்தேன். இருட்டின பிறகு உள்ளே புகுந்தேன். நகர்க்காவல் இலங்கை மாதேவி என்னைக் கொல்ல அட்டஹாஸம் செய்தாள். இடக் கையால் அவளை அடித்து வீழ்த்தினேன். "என்னை வென்றதனுல் இந்த நகரை வெல்வாய்" என்று அவள் நல்ல வாக்குச் சொல்லிப் போனுள்.

இரவெல்லாம் இலங்கை எங்கும் சீதைப்பிராட்டியைத் தேடினேன். காணுமல் வருந்தினேன். கடைசியாக அசோக வனத்தில் சிம்சுபா விருக்ஷத்தில் ஏறிப் பார்த்தேன். தேவியைக் கண்டேன்.

உபவாஸத்தால் இளைத்து, உடலெல்லாம் புழுதி படிந்து, தலையெல்லாம் ஒரே சடையாகி, ராமரையே நோக்கி உருகி உயிர்விட நிச்சயித்திருந்த பிராட்டியை அரக்கிகள் மத்தியில் கண்டேன்.

அப்போது ஆடம்பரத்துடன் ராவணன் அங்கு வந்தான். நான் மரக்கிளையில் இலைமறைவில் பக்ஷிபோல் மறைந்திருந்து பார்த்தேன். ராவணனைக் கண்டவுடன் நடுநடுங்கிய ஸீதை அங்கங்களை மறைத்துக்கொண்டு, தனக்கு யார் துணை என்று பரிதாபமாகச் சுற்றிப் பார்த்தாள். துக்கப்படும் ஸீதையைப் பார்த்துத் தன்னை ஏற்றுக் கொள்ளும்படி ராவணன் மன்றுடினுன். தேவியின் உறுதியைக் கண்டு, "கர்வம் பிடித்தவளே, இன்னும் இரண்டு மாதத்தில் உடன்படாவிட்டால் உன் ரத்தத்தைக் குடித்து விடுவேன்" என்று பயமுறுத்தினுன்.

தேவி அஞ்சவில்லை. "தகாத வார்த்தை கூறும் உன் நாக்கு ஏன் அழுகி விழவில்லை? நீ பலமற்ற கோழை. என் கணவர் இல்லாத சமயத்தில் திருடிக் கொண்டு வந்தாய். சத்திய சீலரும் ரண பண்டிதருமான அந்த ராகவருக்குக் கால் பிடிக்கவும் நீ அர்ஹனல்ல" என்று கடிந்தாள். ராவணன் கோபத்தால் கொதித்தான். வலக் கையை ஓங்கித் தேவியைக் கொல்ல ஓடி வந்தான். ஸ்த்ரீகள் எல்லாரும் 'ஆ ஆ!' என்று கதறினார்கள். ராவணன் மனைவி அவனைத் தடுத்து அணைத்துக் கொண்டாள். ராவணன் திரும்பிப் போனான்.

ராவணன் போனபிறகு ராக்ஷஸிகள் ஸீதாதேவியை நயத்தாலும் பயத்தாலும் வசப்படுத்த முயன்றார்கள். தேவி அவர்களின் அதட்டலைத் துரும்பாகவும் மதிக்கவில்லை. அவர்கள் தோல்வியுற்றுக் களைப்படைந்து தூங்கி விட்டார்கள். அப்பொழுது, உறங்கியிருந்த த்ரிஜடைஎழுந்து, தான் கண்ட பயங்கரமான கனவைக் கூறி, அரக்கர்களுக்கு நாசமும் ராமருக்கு ஜயமும் உண்டாகப்போவதாகச் சொல்லி, ஸீதையைச் சரணம் அடையும்படி எச்சரித்தாள். அரக்கிகளும் அப்படியே சரணம் அடைய, தனக்கு நன்மை உண்டானால் அவர்களையும் பாதுகாப்பதாகத் தேவி உறுதி கூறினாள்.

தேவியின் நிலையைக் கண்டு நான் மிகவும் நொந்து போனேன். எப்படிச் சந்திப்பது என்பதை ஆலோசித்தேன். பிராட்டிக்கு மிகவும் ப்ரியமான ராமசரிதத்தைச் சொல்ல ஆரம்பித்தேன். இதைக் கேட்டுச் சந்தோஷித்த தேவி என்னைப் பார்த்து, "நீ யாரப்பா? ராமருக்கும் உனக்கும் எப்படிச் சம்பந்தம் உண்டாயிற்று?" என்று கேட்டாள்.

சுருக்கமாக விஷயத்தை விளக்கி, "நான் வாயுபுத்திரன்; சுக்கிரீவருக்கு மந்திரி; ராமதூதன். இதோ அவர் கணையாழி" என்று சொல்லிக் கொடுத்து, "இனி நான் செய்ய வேண்டியது என்ன என்று கட்டளையிட வேண்டும், தேவியே. இப்போதே ராமலக்ஷ்மணர் இருக்கும் இடத்துக்குத் தங்களைக் கொண்டுபோய்ச் சேர்த்து விடுகிறேன்" என்று பிரார்த்தித்தேன்.

தேவி இதை அங்கீகரிக்கவில்லை. "ராமர் இங்கு வந்து ராவணனை வீழ்த்தி என்னை அழைத்துப் போவதே தகுதியானது" என்றாள்.

உயர்கருத்துடைய அந்த உத்தமியை நான் தலையால் வணங்கி, "ராமர் நம்பக்கூடிய அடையாளம் ஒன்று கொடுங்கள்" என்று கேட்டேன். பேரடையாளமாக இந்தச் சூடா

மணியைக் கொடுத்தாள் தேவி. நான் பிரதக்ஷிணம் செய்து வணங்கிப் புறப்பட யத்தனித்தேன். அப்போது பிராட்டி, "மாருதி, என் விருத்தாந்தத்தை ராமருக்குச் சொல்லும். எப்படிச் சொன்னால் ராமலக்ஷ்மணரும் சுக்ரீவரும் உடனே புறப்பட்டு வருவார்களோ அப்படிச் சொல்லும். ராவணன் இட்ட இரண்டு மாதத் தவணையும் கடந்து, அநாதையாக இங்கு நான் மாண்டபிறகு, அவர்கள் வரும்படி நேராதபடி முன்னெச்சரிக்கையாகச் சொல்லும்" என்றாள்.

அந்தப் பரிதாபமான வார்த்தையைக் கேட்டு எனக்குத் துக்கமும் கோபமும் வந்தன. பிராட்டியிடம் விடைபெற்றுப் புறப்பட்டேன்.

மேலே என்ன செய்ய வேண்டும் என்று சிந்தித்தேன். என் உடலை வளர்த்து, அசோகவனத்தை அழித்தேன். இதைக் கண்டு பயந்த அரக்கர்கள் ராவணனிடம் ஓடி முறையிட்டனர். அவன் தன் மனம்போல் வேலை செய்யக் கூடிய கிங்கரரை அனுப்பினான். ஆயுதபாணிகளான எண்பதினாயிரம் அரக்கர்கள் எதிர்த்தனர். அவர்களை அழித்தேன். சிங்கார மண்டபத்தையும் காவலாளிகளையும் நாசம் செய்தேன்.

பின்பு பிரஹஸ்தனுடைய பிள்ளை ஜம்புமாலி படைகளோடு வந்தான். அவர்களையும் கொன்றேன். மந்திரி புத்திரர்கள் வந்தார்கள். அவர்களையும் கூட்டத்தோடு யமலோகத்துக்கு அனுப்பினேன்.

ராவணன் ஐந்து ஸேனாதிபதிகளை அனுப்பினான். சேனைகளும் அவர்களும் அழிந்தார்கள். ராவணபுத்திரன் ரணபண்டிதனான அக்ஷகுமாரன் இளைஞர்கள் சூழப் படையோடு வந்தான். படையோடு அழிந்தான்.

ராவணனுடைய குமாரன், யுத்தமதம் கொண்ட இந்திரஜித் வந்தான். அவனுடைய ஆண்மையையும் அழித்துச் சந்தோஷித்தேன். என் நிலையையும் தன் நிலையையும் கண்ட இந்திரஜித் ப்ரஹ்மாஸ்திரத்தால் என்னைக் கட்டினான்.

ராக்ஷஸர்கள் என்னைக் கயிற்றினால் கட்டி ராவணனிடம் கொண்டு போனார்கள். ராவணனைக் கண்டேன். நான் வந்த காரணத்தையும் அரக்கர்களைக் கொன்ற காரணத்தையும் கேட்டான். எல்லாம் ஸீதாதேவிக்காகத்தான் என்று பதில் சொன்னேன். வாலியைக் கொன்று ராமர் சுக்ரீவருக்கு அரசையும் மனைவியையும் திருப்பித் தருவதென்றும், சுக்கிரீவர் ஸீதாதேவியைத் தேடித் தருவதென்றும் இருவருக்கும்

ஏற்பட்ட அக்கினிஸாக்ஷியான ஒப்பந்த நட்பை விளக்கினேன். இப்படியே ராமர் வாலியைக் கொன்று அரசளித்ததையும், சுக்கிரீவ ஆக்ஞையால் ராமகார்யத்தை நிறைவேற்ற வானரர்கள் தேவியைத் தேடிப் புறப்பட்டதையும் விவரித்தேன். வானரர்கள் அரக்கர்களையும் இலங்கையையும் அழிக்குமுன் ஸீதாதேவியை ராமரிடம் கொண்டுவந்து விட்டுவிடும்படி சுக்கிரீவர் கூறியதாக அறிவுறுத்தினேன்.

இதைக் கேட்ட ராவணன் கோபத்தால் கொதித்தான். கொளுத்திவிடுபவன்போல் என்னைப் பார்த்தான். "கொன்று விடுங்கள்" என்று கட்டளையிட்டான். என் பிரபாவத்தை அறியாதவன், பாவம்!

ஆனால் ராவணனுடைய தம்பி மகாமேதாவியான விபீஷணர் எனக்காகப் பரிந்து பிரார்த்தித்தார். "எவ்வளவு கொடிய குற்றம் செய்தாலும் தூதர்களை அங்கபங்கப்படுத்தலாமே தவிரக் கொல்லக்கூடாது" என்று சாஸ்திரத்தை எடுத்துக் காட்டினார். இதன்மேல் ராவணன், "இவன் வாலைச் சுடுங்கள்" என்று கட்டளையிட்டான். ராக்ஷஸர்கள் என் வாலில் துணிகளையும் சணலையும் சுற்றி நெருப்பு வைத்தார்கள். கட்டியிருந்த என்னைக் கட்டையாலும் முஷ்டியினாலும் இடித்தார்கள். ராஜவீதிகளில் இழுத்துக்கொண்டு போனார்கள். கூச்சலிட்டுக்கொண்டே கோபுர வாசலுக்கு வந்தார்கள். நான் உடலைச் சுருக்கிக் கட்டை விடுவித்துக் கொண்டேன். இரும்புத் தடியால் அரக்கர்களை அடித்துக் கொன்றேன். என் வாலில் இட்ட தீயைக் கொண்டு மாடமாளிகையுடைய இலங்கை முழுவதையும் ஊழித்தீப் போல் கொளுத்தினேன். எரியாத பாகம் எங்கும் இல்லை.

இதனால் ஸீதாதேவியும் எரிந்துவிட்டாளோ என்ற ஸந்தேகம் திடீரென்று உண்டாயிற்று. மகத்தான ராமகாரியம் கெட்டுப்போயிற்றே என்று சோகமடைந்தேன்.

அப்பொழுது, "ஜானகி மட்டும் எரிக்கப்படவில்லை" என்று ஆகாயவாஸிகள் ஆச்சரியத்தோடு பேசிக் கொண்டனர். அது என் காதில் விழுந்தது. என் மனம் சந்தோஷத்தோடு திடமாக இருந்தது. இனிய காற்று வீசியது. என் வால் நெருப்பும் என்னைக் கொளுத்தவில்லையே என்ற நிச்சயம் உண்டாயிற்று. மனத் தெளிவோடு மீண்டும் தேவியைக் கண்டு விடைபெற்றுக் கொண்டேன்.

மீண்டும் உங்களைக் காணும் ஆசையோடு வானமார்க்கமாக உங்களிடம் வந்தேன். ஸ்ரீராமருடைய பிரபாவத்தா

லும் உங்களுடைய தேஜஸ்ஸாலும் சுக்கிரீவ கார்யத்தை நிறைவேற்றியிருக்கிறேன். மீதியுள்ள கார்யங்கள் எவ்வண்ணம் நடக்க வேண்டுமென்று ஆலோசனை கூறுங்கள் என்று ஹநுமான் கூறி நிறுத்தினர்.

பிறகு ஹநுமான் முதலான வானரர்கள் தேனைக்குடித்து ஆரவாரம் செய்தார்கள். ததிமுகன் என்பவன், 'மதுவனம் அழிக்கப்பட்டது' என்று சுக்கிரீவனிடம் சொல்ல, பின்பு ஹநுமான் ராமனைப் பார்த்துச் சூடாமணியைக் கொடுத்துத் தேவியின் கற்பையும் அவள் நிலையையும் எடுத்துக் கூறினர்.

ஸ்ரீராமஜயம்

# ஸ்ரீ ராம நவமி விரத பாராயணம்

## நாட்டு ஆஸ்திகப் பெருமக்களுக்கும் சிறுவர்களுக்கும் வேண்டுகோள்

நன்மையும் செல்வமும் நாளும் நல்குமே
தின்மையும் பாவமும் சிதைந்து தேயுமே
சென்மமு மரணமும் இன்றித் தீருமே
இம்மையே ராமவென் றிரண்டெழுத்தினல்.
—கம்பராமாயணம், சிறப்புப் பாயிரம் 14

1. நாளது பங்குனி மாதம் ஸ்ரீராமநவமியன்று குழந்தைகள் முதல் முதியவர்கள் வரை ஒவ்வொருவரும் இராமாவதாரத்திலுள்ள (கம்ப ராமாயணத்திலுள்ள) கீழ்க்காணும் பாக்களைப் பாராயணம் செய்ய வேண்டும்.

வேய்புனர் பூசமும் விண்ணுளோர்களும்
தூயகற் கடகமும் எழுந்து துள்ளவே. (101)
சித்தரும் இயக்கரும் தெரிவை மார்களும்
வித்தக முனிவரும் விண்ணுளோர்களும்
நித்தரு முறைமுறை நெருங்கி யார்ப்புறத்
தத்துறல் ஒழிந்துநீள் தருமம் ஓங்கவே. (102)
ஒருபகல் உலகெலாம் உதரத்துட் பொதிந்
தருமறைக் குணர்வரும் அவனை யஞ்சனக்
கருமுகிற் கொழுந்தெழில் காட்டுஞ் சோதியைத்
திருவுறப் பயந்தனள் திறங்கொள் கோசலை. (103)
—கம்பராமாயணம், பாலகாண்டம்-திருவவதாரப் படலம்.

2. 20 வயதுக்கு மேற்பட்டவர்கள் அன்று முழுவதும் பட்டினி (சுத்த உபவாஸ) விரதம் இருக்க வேண்டும்.

3. ஒவ்வொரு கிராமத்திலும் பள்ளிச் சிறுவர்கள் முதல் முதியவர்கள் வரை எல்லோரும் ஏதாவது ஒரு சிறிய கோயில் ஸந்நிதியிலோ அல்லது பஜனை மடத்தின் முன்போ கூடி, ஸ்ரீராம நாம மந்திரத்தை ஐந்து நிமிஷம் ஜபம் செய்து பிறகு (ஸ்ரீராம் ஜயராம் ஜய ஜயராம்'' என்னும் 13 அக்ஷரங்கள் கொண்ட மந்திரத்தை ஒருவர் முதலிற் சொல்ல) எல்லோரும் அதைப் பின்பற்றிச் சொல்லிக்கொண்டு, ஊரைச் சுற்றிவந்து, முதலில் ஆரம்பித்த இடத்தையடைந்து அங்குப் பத்து நிமிஷம் பஜனை செய்து, பூர்த்தி செய்ய வேண்டும்.

4. மறுநாள் காலை அதே இடத்தில் கூடி இராமாவதாரத்தில் (கம்ப ராமாயணத்தில்) உள்ள கீழ்க்காணும் பாக்களையோ அல்லது கிரந்தம் படித்தவர்கள் எவரேனும் இருந்தால் அவரைக்கொண்டு வால்மீகி ராமாயணத்தில் உள்ள ஸ்ரீராம பட்டாபிஷேக ஸர்க்கத்தையோ பாராயணம் செய்யும்படிச் செய்து, பத்து நிமிஷம் பஜனை செய்து, ஊர்ப் பொதுச் செலவில் ஏழை மக்களுக்கு அன்னம்பாலிக்க வேண்டும்.

மங்கல கீதம்பாட மறையொலி முழங்க வல்வாய்ச்
சங்கினம் குமுறப் பாண்டில் தண்ணுமை யொப்பத்
[தாவில்
பொங்குபல் லியங்கள் ஆர்ப்பப் பூமழை பொழிய
[விண்ணோர்
எங்கள் நாயகனை வெவ்வேறு எதிர் அபிடேகஞ்
[செய்தார். (33)

மாதவர் மறைவலாளர் மந்திரக் கிழவர் முற்று
மூதறிவாளர் உள்ளஞ் சான்றவர் முதலீராட்டச்
சோதியான் மகனு மற்றைத் துணைவரும் அனுமன்
[தானும்
தீதிலா இலங்கை வேந்தும் பின் அபிடேகஞ்
[செய்தார். (34)

சித்திமொத்தனன் என்றேதுந் திருநகர்ச் செல்வ
[மென்ன
உத்தமத் தொருவன் சென்னி விளங்கிய உயர்பொன்
[மௌலி
ஒத்து மெய்க்குவமை கூற வோங்கு மூவுலகத்தோர்க்குந்
தத்தம் உச்சியின்மேல் வைத்தது ஒத்தெனத் தளர்வு
[தீர்ந்தார்.

—கம்பராமாயணம், யுத்த காண்டம்-திரு அபிடேகப் படலம்.

இராமபிரானின் சிரத்தின்மேல் பொற்கிரீடம் விளங்கியது கண்டு மூவுலகிலுமுள்ள மக்களும் தத்தம் சிரமேல் பொற்கிரீடம் வைக்கப்பட்டது போலவே எண்ணி மகிழ்ந்தார்கள்.

5. நாட்டிலுள்ள எல்லா மக்களிடையேயும் தெய்வ பக்தியும், நன்னடத்தையும் வேரூன்றி வளரவேண்டுமென்று எல்லோரும் ஆண்டவனைப் பிரார்த்தித்துக் கொள்ள வேண்டும்.

**குறிப்பு :** மேற்கண்ட இவ் வெளியீட்டை, ஒவ்வோர் ஊரிலுள்ள அன்பர்களும் பிரதி எடுத்து 1000க்குக் குறையாமல் அச்சிட்டு, பங்குனி மாதம் அமாவாஸ்யை (மார்ச்சு 30) முதல் அச்சிட்ட பிரதிகளை ஊரிலுள்ள மக்களுக்கெல்லாம் விநியோகம் செய்யவேண்டும்.

# ஸ்ரீ ராமாவதாரத்தின் பெருமை

ஸ்ரீ ரங்கநாதன் திரேதாயுகத்தில் சக்ரவர்த்தி குலத்தில் ஸ்ரீராமனுய் அவதரித்தார், கௌஸல்யாதேவி ஸ்ரீரங்கநாதனை அஷ்டாங்க யோகத்தால் தியானம் செய்தாளென ஸ்ரீவால் மீகியே

''பிராணாயாமே ந புருஷம் த்யாய மாநாஜநார்தனம்'' எனக் கூறியுள்ளார். ஒருசமயம் பெரிய சந்தோஷ சமாசாரத்தை தாயினிடம் கூறச் சென்ற ஸ்ரீராமன், அரண்மனையில் தாயைக் காணுமல் ஸ்ரீரங்கனுதனுடைய கோவிலுக்குச் சென்ருர். அங்கு தாயான ஸ்ரீ கௌஸல்யாதேவி ஸ்ரீ ரங்கநாதனுடைய சரண கமலங்களில் நமஸ்கரித்துக் கொண்டே தன்குழந்தையான ஸ்ரீராமன் ஸ்ரீமானுகவும் சக்ரவர்த்தியாகவும் விளங்கவேண்டுமென யோசித்துக் கொண்டார். இம்மாதிரி கௌஸல்யாதேவி ஸ்ரீ ராமனை புத்ரனுக அடைவதற்கு ஸ்ரீ ரங்கநாதனை பலவாருக் ஆராதித்து இருக்கிருள். அத்தவத்தின் பயனுகத்தான் ஸ்ரீ ரங்கத்தில் விளங்கும் ஸ்ரீரங்கனுதன் புத்ரனுக அவதரித்தார். உலகில் தன்னை ஸத்யவானுக (பொய் சொல்லாதவனுக) செய்து கொள்ள பலர் விரும்புவது இயற்கை. ஆனுல் ஸ்ரீ ராமனேவெனில் தன் பிதாவான ஸ்ரீ தசரதன் பொய்யனுக ஆகக் கூடாது (ஸத்யவானுக) ஆக வேண்டுமெனக் கருதி இராஜ்யத்தை துறந்து சீதையுடன் மாந்தோல் மரை உறி தரித்து பரதேசியாய் காட்டிற்கு சென்ருர். இதுதான் ஆச்சரியத்திலும் ஆச்சரியம். இக்கதையைக் கேழ்க்கின்றவர்கள் அனைவரும்

தனது தாய் தந்தைகளை தெய்வமாகத்தான் நினைப்பார்கள். பொய் பேசமாட்டார்கள். ஸத்யத்தைக் கைப்பிடிப்பார்கள். தண்டகாரண்யத்தில் மஹரிஷிகளெல்லாம் ஸ்ரீ ராமன் தேவியுடனும் லக்ஷ்மணனுடன் வனம் வந்ததைக் கண்டு, ஆனந்தமடைந்தனர். அப்பொழுது சில முனிவர்கள், காயத்ரீ ஜபம் செய்து கொண்டிருந்ததை பாதியில் விட்டு ஸ்ரீராமனை தரிசிக்க வந்தனர். அவ்வாறே வேத பாராயணம் செய்து கொண்டிருந்தவர்களும் அக்நிஹோத்ரம் செய்து கொண்டிருந்தவர்களும் பிரம்ம தியானம் செய்து கொண்டிருந்தவர்களும் அதிதிகளை பூஜித்துக் கொண்டிருந்தவர்களும் மற்றும் பல நல்ல காரியங்களை செய்து கொண்டிருந்தவர்களும் பாதியில் விட்டு விட்டு ஸ்ரீ ராமனை வந்து தெரிசித்து தன் தவத்தின் பயனே வந்து விட்டதெனக் கருதினார்களே, அப்படிப்பட்ட ககுஸ்த குல திலகனும் பதினாயிரம் மனிதனுக்கு ஒப்பானவனுமான ஸ்ரீராமனை என் மனம் நாடுகிறதென தஞ்சை ஜில்லா காவேரீ தீரம் திருவிசநல்லூரில் சுமார் முன்னூறு வருஷங்களுக்கு முன் இருந்தவரான ஸ்ரீராம பத்ர தீக்ஷிதர் என்பவர் மனமுறுகி கூறி இருக்கிறார்.

அர்த்தா வர்த்தித மந்த்ரமர்த்த விரதஸ்வாத்யாய மர்த்தோஜ்ஜித
ப்ரஹ்மோபாஸன மர்தமுக்த ஹவநாதித்யாதி ஸர்வக்ரியம் |
த்ருஷ்ட்வா பஞ்சவடீ ஜுஷோயம்ருஷய: ஸார்த்தம் தபோ மேநிரே
கந்தர்பாயுத ஸுந்தரம் வ்ரஜதி மேகாகுத்ஸ்தமே நம் மந: ||

கலியுக வரதனை இப்படிப்பட்ட ஸ்ரீராமனை பூஜிப்பதற்காக ஸ்ரீராமநவமி சமயத்தில் தேசமெங்கும் ஸ்ரீராமனை ஆராதிக்கின்றனர். நமது ஜெகத்குரு பரமாசார்யாளும் மடத்தில் ஸ்ரீ ஸ்வாமி ஸன்னிதியில் தினமும் ஸ்ரீமத்ராமாயணத்தில் ஒரு சர்கம் பாராயணம் செய்யும்படி செய்திருக்கின்றனர், பலர் ஸ்ரீராமஷடாக்ஷரீ மூல மந்திரத்தை குருமுகமாய் உபதேசம் பெற்று தினமும் ஜெபம் செய்து ஸர்வ காரிய சித்தியையும் அடைகின்றனர், பலர் சுந்தர காண்டத்தை பாராயணம் செய்து பலவிதமான கோரிய பொருளை அடைந்து வருகின்றனர். இதற்கெல்லாம் காரணம் கலியுக வரதனை ஸ்ரீராமனுடைய அருள்.

# ஸ்ரீ ராம கதையின் சிறப்பு

பகவத் ஸ்ருஷ்டியில் எண்பத்து நான்கு லக்ஷம் ஜீவராசிகளில் மானிடராய் பிறப்பது, அநேக ஜன்மங்களில் செய்த புண்ய விசேஷத்தாலானது. மனித ஜாதிக்கும் பசு பக்ஷி மிருக ஜாதிகளுக்கும் ஆகாரம், நித்ரை, பயம், மைதுனம் முதலியவை ஒன்றானாலும், பகுத்தறிவு என்பது மனித சரீரத்தில் தான் உள்ளது. அதை உபயோகிக்காதவன் பசு ஸமானமாவான், இதையே "பஸ்வாதி பிஸ்சாவிசேஷாத்" என்று வியாஸ ஸூத்ரம் கூறுகிறது.

மனிதன் பகுத்தறிவால், வேதசாஸ்திர இதிஹாஸ புராணங்களின் உபதேசங்களைக்கேட்டு, துக்க ஸாகரங்களிலிருந்து கரையேறி, நித்ய, நிரதிசய, நிரவதிக ஸுகங்களைப் பெற ஹேதுவாகிறான். மனிதர்களில் சிலருக்கே வேத சாஸ்திரங்களை உணரும் தன்மையும் அதிகாரமும் ஏற்படுவதால் எல்லோரும் ஸுலபமாக தர்மா தர்மங்களை அறிய, பகவானே ஸ்வயம் ஸ்ரீராமனாக அவதரித்து நடத்திக் காட்டிய தர்மோபதேசமே ஸ்ரீமத் ராமாயணமாகும். ஸ்ரீமத் ராமாயணத்துக்கும் 'வேதங்களுக்கும் வித்யாஸமே இல்லை. ஆனாலும் வேதங்களால் தர்மங்களை அறிபவர்கள் சிலரே. ஸ்ரீமத் ராமாயணத்தாலோ மனித சமூகமே அறியவசதியுள்ளது. இதுவே வேதங்களைக் காட்டிலும் ஸ்ரீமத் ராமாயணத்தின் சிறப்பு.

மேலும், ஸ்ரீ ராமன், உலகில் வேதங்களால் உபதேசிக்கும் ஸகல புருஷார்த்தங்களையும் அடைய வேண்டிய வழி வகுத்த ஆதர்ச புருஷனாக விளங்கினான். அந்த ராமனின் சிறப்பு அவன் கல்யாண குணங்களால்தான் அறியப்படுகிறது. அப்பேர்பட்ட கல்யாண குணங்கள் ஸ்ரீராமாயணத்தில் கூறப்படுகின்றன. ஆதலால் ஸ்ரீமத் ராமாயணத்தால் ஸ்ரீ ராமனுக்கே சிறப்பு. இதை ஓர் உதராணத்தால் அறியலாம்.

ஸ்ரீ ராமனுக்குப் பட்டாபிஷேகம் நடந்து ஸீதாராமர்கள் ஸம்வாதம் செய்து கொண்டு ஏகாந்த ஸேவையில் ஜானகியைப் பார்த்து, "உனக்கு என்னைப் பிடிக்கிறதா, அல்லது என் கதையைப் பிடிக்கிறதா" என்று ராமன் வினவினார். அதற்கு ஸீதாதேவியும், உடனே பதில் கூறினாள். 'தங்களைவிட தங்கள் கதைதான் பிடித்தது' என்று பதிலுரைத்தாள். எப்படி எனில் ராவணன் சீதையை அபகரித்து மாதங்கள் பத்து ஓடின. ராமன் தன்னை மீட்கும் பேச்சே இல்லை. ராக்ஷஸிகள் தொல்லைகளே அதிகரித்தது. அது சமயம் ஸீதாதேவியும் மனமுடைந்து, தன் வினைகளை நினைத்து, ஆத்ம ஹத்தி செய்யவும் துணிந்து விட்டாள். அப்பொழுதும் ராமன் கருணை புரியவில்லை. தற்செயலாக

சிம்சுபாவிருக்ஷத்திலிருந்து ஸ்ரீராம கதையை யாரோ உபதேசிக்கும் குரல் கேட்டது. ஜானகியும் நிமிர்ந்து நோக்கினாள். ஆஞ்ஜநேய பாகவதர் ஸ்ரீமத் ராமாயாணம் உபதேசம் செய்கிறார். அதைக் கேட்ட ஜானகியும் மலர்ந்த முகத்துடன் நோக்கி ஹனுமானை சமீபத்தில் அழைத்து துக்கங்களைத் துறந்து, பிராண த்யாக ஸங்கல்பத்தை விட்டு, அங்குலீய ப்ரதானத்தால் பரம லாபத்தையும் பெற்றாள். பிறகு, ஸ்ரீராமன் வந்து ராவணாதிகளை ஸம்ஹரித்து அழைத்துச் சென்றார். அதனால் ஸ்ரீராமனைவிட, ஸ்ரீராம கதைக்குத் தான் தீர்காயுளைத் தரும் தன்மையுள்ளது என்ற ஸித்தாந்தம் ஏற்பட்டு ஸீதாதேவியும் ஸ்ரீராமனிடம் அப்படி பதில் கூறினாள்.

பகவானும் அதை ஆமோதித்து தன்னை விட தன் கதையே சிறந்தது என்று உலகுக்குக் காட்ட குசலவர்களிடம் எனக்கும் க்ஷேமலாபங்களைக் கொடுக்கும் ஸ்ரீராமாயணத்தை கானம் செய்யுங்கள் என்று உரைத்து ஸ்ரீ ராமாயணத்தின் பெருமை காட்டினார்.

"மமாபி தத்பூதிகரம் ப்ரசக்ஷதே மஹானுபாவம்
சரிதம் நிபோதத"

என்றவாறு,

ஸ்ரீராமனுக்கே பெருமையளிப்பதும், சீதாதேவிக்கு ப்ராண பிக்ஷையளித்ததும், எல்லா மனிதர்களும் உய்யும் வழியை உபதேசம் செய்து வேதங்களைவிட சிறந்ததுமான 'ஸ்ரீமத் ராமாயணத்தின் சிறப்பே சிறப்பு.

இப்பேர்பட்ட ராமாயணத்தை இன்னும் எப்பொழுதும் ஸகலரும் கேட்டுப் பாராயணம் செய்தும் ஸகல லாபங்களையும் அடையலாம்.

# ஸ்ரீராம நாம மஹிமை

**வே**தத்தின் அடிப்படையில் வந்தது, நமது ஹிந்து மதம். கருணையே வடிவமானது. பகவானிடத்தில் எவ்வளவு கருணையிருக்கிறதோ அதற்குச் சரியான குற்றம் உலகத்திலேயே கிடையாது என்று உறுதி. அந்த தீர்மானத்தில் மனித சமூகத்தை உய்விக்க வந்த அருமையான சாதனம் தான், பகவன் நாமம். வேதசாரம், ஹரிநாமம், ஸ்ரீ பாகவதம் முழுவதுமே, நாம சங்கீர்த்தன மஹிமையைத்தான் கூறுகிறது. தென்னாட்டில் அவதாரம் செய்த மஹான் போதேந்திர சுவாமிகள் பதினாறு புத்தகங்கள் (இரண்டு

லக்ஷக்ஷம் சுலோகங்களைக் கொண்டது) எழுதினார். அது முழுவதுமே ஸ்ரீ-'ராம' நாம மஹிமைதான்.

மேலும் ராம நாமமானது அஷ்டாக்ஷரமான, 'ஓம் நமோநாராயணாய' என்பதிலுள்ள'ரா' என்ற எழுத்தையும் பஞ்சாக்ஷரத்திலுள்ள (நமச்சிவாய) 'ம' என்ற எழுத்தையும் சேர்த்து 'ராம' என்று ஆகிவிட்டது. 'தத்வமஸி' முதலிய மஹா வாக்யங்களின் அர்த்தமும் இதிலடங்கியுள்ளது. ராமநாமத்தின் சிறப்பால்தான், காட்டில் வேடனாக சஞ்சரித்தவன் வால்மீகி என்ற மஹா கவியாக ஆனான். நமது இந்திய கலாசாரத்திற்கு அடிப்படையாக முதல் நூலாக ஸ்ரீ ராமாயணத்தை எழுதினார். அவர்தான் கவிகளுக்கே வழிகாட்டியாக அமைந்தார். நால்வேதக் கருத்துக்களையும் தன்பால் கொண்டது, வால்மீகி ராமாயணம். ராம நாமத்தின் சிறப்பே இந்த ராமாயணம்.

மேலும் ராமாயண கதா பாத்திரங்களில் ராமனுக்குச் சமமாகப் பூஜிக்கப்படுபவர் ஆஞ்சநேயனே! அந்த ஆஞ்சனேயனால்தான் ராமாயண கதை பூர்த்தியடைந்தது. ஆஞ்சனேயனுக்கு உயிராய் இருப்பது, 'ராம நாமமே'! ஒவ்வொரு ரோமங்களும் ராமநாமத்தைக் கூறுகிறது. எல்லாவித பாபங்களையும் போக்கடித்து சகல ஞானத்தையும் பக்தியையுமளித்து இகபர சௌபாக்கியங்களையும் அருளவல்லது ஸ்ரீ ராம நாமம். அந்த நாமத்தை ஜபித்து ராமன் திருவருளைப் பெறுவோமாக!

## ஸ்ரீ ஆஞ்சநேய கவசம்

அஸ்யஸ்ரீ ஹனுமத் கவச ஸ்தோத்ர மஹா மந்த்ரஸ்ய | ஸ்ரீராமசந்த்ர ருஷி: | காயத்ரீச்சந்த: | ஸ்ரீ ஹனுமான் பரமாத்மா தேவதா | மாருதாத்மஜ இதி பீஜம் | அஞ்சனாஸூனுரிதி ஸக்தி: | ஸ்ரீராமதூத இதி கீலகம் | மம மானஸாபீஷ்ட ஸித்யர்த்தே ஜபே வினியோக: ||

ஸ்ரீராமசந்த்ர உவாச

ஹனுமான் பூர்வத: பாது தக்ஷிணே பவனாத்மஜ: |
ப்ரதீச்யாம் பாது ரக்ஷோக்ன: ஸௌம்யாம்
ஸாகரதாரண: || 1

ஊர்த்வம் மே கேஸரீ பாது விஷ்ணு பக்தஸ்து மேஹ்யத: |
லங்காவிதாஹக: பாது ஸர்வாபத்ப்யோ நிரந்தரம் || 2
ஸுக்ரீவ ஸ சிவ பாது மஸ்தகே வாயுநந்தன: |
பாலம் பாது மஹா வீர: ப்ருவோர்மத்யே நிரந்தரம் || 3
நேத்ரோ சாயாபஹாரீச பாதுமாம் ப்லவகேஸ்வர: |
கபோலௌ கர்ணமூலேது பாது மே ராமகிங்கர: || 4

நாஸாயாமஞ்ஜனானந்து: பாது வக்த்ரம் ஹரீஸ்வர: |
பாது கண்டஞ்ச தைத்யாரி: ஸ்கந்தௌ பாது
ஸுரார்சித: || 5

புஜௌ பாது மஹா தேஜா: கரௌது சரணாயுத: |
நகான் நகாயுத: பாது குக்ஷௌ பாது கபீஸ்வர: || 6
வக்ஷோ முத்ராபஹாரீச பாது பார்ஸ்வே மஹா புஜ: |
ஸீதா ஸோகப்ரஹர்தாச ஸ்தனௌ பாது நிரந்தரம் || 7
லங்காபயங்கர: பாது ப்ருஷ்டதேஸே நிரந்தரம் |
நாபிம் ஸ்ரீராமசந்த்ரோ மே கடிம் பாது ஸமீரஜ: || 8
குஹ்யம் பாது மஹாப்ராக்ஞ: ஸக்தினீ ச ஸிவப்ரிய: |
ஊரூச ஜானுனீ பாது லங்கா ப்ராஸாத பஞ்ஜன: || 9
ஜங்கே பாது கபிஸ்ரேஷ்ட: குல்பம் பாது மஹாபல: |
அசலோத்தாரக: பாது பாதௌ பாஸ்கர ஸன்னிப: ||
அங்கான்யமித ஸத்வாட்ய: பாது பாதாங்குளீஸ்ஸதா
ஸர்வாங்காநி மஹாஸூர: பாது ரோமாணிசாத்மவான்
ஹனூமத் கவசம் யஸ்து படேத் வித்வான் விசக்ஷண:
ஸ ஏவ புருஷஸ்ரேஷ்ட: புக்திம் முக்திஞ்ச விந்ததி ||
த்ரிகாலமேககாலம்வா படேன் மாஸத்ரயம் நர: |
ஸர்வான் ரிபூன் க்ஷணாஜ்ஜித்வா ஸ புமான்
ஸ்ரியமாப்னுயாத் || 13
அர்தராத்ரௌ ஜலேஸ்தித்வா ஸப்த வாரம் படேத்யதி
க்ஷயாபஸ்மார குஷ்டாதி தாபத்ரய நிவாரணம் || 14
அஸ்வத்தமூலேர்கவாரே ஸ்தித்வா படதி ய: புமான் |
அசலாம் ஸ்ரியமாப்னோதி ஸங்க்ராமே விஜயீபவேத் ||
ஸர்வரோகா; க்ஷயம் யாந்தி ஸர்வஸித்திப்ரதாயகம் |
ய: கரே தாரயேந்நித்யம் ராமரக்ஷா ஸமன்விதம் || 16
ராமரக்ஷாம் படேத்யஸ்து ஹனுமத் கவசம் வினா |
அரண்யே ருதிதம் தேன ஸ்தோத்ரபாடஞ்ச நிஷ்பலம்
ஸர்வது: கபயம் நாஸ்தி ஸர்வத்ர விஜயீ பவேத் |
அஹோராத்ரம் படேத்யஸ்து ஸுசி: ப்ரயதமானஸ: ||
முச்யதே நாத்ரஸந்தேஹ: காராக்ருஹகதோ நர: |
பாபோபபாதகான் மர்த்ய: முச்யதே நாத்ரஸம்ஸய: ||
யோவாரந்நிதிமல்பபல்வலமிவோல்லங்க்ய ப்ரதாபான்வித:
வைதேஹீகனஸோகதாபஹரணோ வைகுண்டபக்திப்ரிய: |
அக்ஷக்னோஜிதராக்ஷஸேஸ்வர மஹாதர்பாபஹாரீரணே
ஸோயம் வானரபுங்கவோऽவது

ஸதாத்வஸ்மான் ஸமீராத்மஜ: || 20

. ஸ்ரீ ராமவிரசிதம் ஸ்ரீ ஆஞ்சனேய கவசம் ஸம்பூர்ணம்.